ஓம்:

ஸ்ரீ இரெட்டியப்பட்டி சுவாமிகள் துணை.

# அருள் மணிப் பெட்டகம்



ஆக்கியோன்:

அடியார்க்கு அடியான்



செல்வன்: வே. குருநாதன் M. A.,

செல்வி: ஜான்ஸி ராணி

திருமண நாளில் வெளியிடுவோர்:

**ஸ்ரீ இரெட்டியப்பட்டி சுவாமிகள் இலக்கியப் பதிப்பகம்**

அடியார்கள் இல்லம்: தொலைபேசி: 34600

32, கோவிந்தப்ப நாயக்கன் வீதி, சென்னை-1.

1—7—1974

ஓம்:

# அடியார்களின் தகுதி.

1 அன்பும் அடக்கமும் அடியவர்களுக்குத் தேவை.

2. கோபம் அடியார்களின் முதற் பகை.

3. கொடிய பகைவர்களிடமும் நிறைந்த அன்போடு பழகுதல் வேண்டும்.

4. யாரையும் எக்காரணம் கொண்டும் இகழ்தல் கூடாது.

5. கடுஞ்சொல் கடுகளவும் கூடாது.

6. இறைவனின் அருள் நிகழ்ச்சிகளை அகத்தே எண்ணி, நெக்கு உருகுதல் வேண்டும்.

7. புலனடக்கமின்மை இல்லிக்குடம் போன்றது. ஈட்டும் அருள் அதன் வழியே சென்றுவிடும்; ஒன்றும் நிற்காது.

8. அடியார்கள் யாவராயினும் நம் ஆழ்ந்த உறவினர் என எண்ணுதல் வேண்டும்.

ஆண்டவர் அருள்.

ஓம்:

ஸ்ரீ இரெட்டியப்பட்டி சுவாமிகள் துணை.

# அருள்மணிப் பெட்டகம்





 


ஆக்கியோன்:

'அடியார்க்கு அடியான்'




செல்வன்: **வே. குருநாதன் M. A.,**

செல்வி: **ஜான்ஸி ராணி**


திருமண நாளில் வெளியிடுவோர்:

**ஸ்ரீ இரெட்டியப்பட்டி சுவாமிகள் இலக்கியப் பதிப்பகம்**

32, கோவிந்தப்ப நாயக்கன் வீதி, சென்னை-1.

1—7—1974.

ஓம்.

ஸ்ரீ இரெட்டியப்பட்டி சுவாமிகள் துணை.

# அருள் மணிப் பெட்டகம்

## 1. அருள் அடையாளம்

அமுதமவன் அன்பறமும் அருளறிவும் அவனே
குமுதமவன் மதியமவன் குவலயம்வான் அவனே
சுமுகனவன் தூமறைகள் சொல்பொருளும் அவனே
நமைப்புரக்கும் இருடிநகர் நாயகன்காண் மனமே. 1

வேதமவன் விளக்கமவன் வேதமுதல் அவனே
நாதமவன் நாதமுடி மிசைநடிப்போன் அவனே
போதமவன் போதாந்தம் புகட்டுபவன் அவனே
பாதமலர் அருள் இருடிப் பட்டி குரு மனமே. 2

அருவமவன் உருவமவன் அருவுருவும் அவனே
புருவநடுப் பொலியும் அருட் பெருஞ்சோதி அவனே
பருவம்றிந் தருள் புரிந்து பாலிப்போன் அவனே
திருவருள் செய் இருடிநகர்த் தேசிகன்காண் மனமே. 3

உயர்வற நல் லுயர்வருளும் உண்மைஇறை அவனே
அயர்வறவே அனைத்துயிர்க்கும் அமுதருள்வோன் அவனே
மயர்வறவே மதிநலங்கள் வகுத்துரைப்போன் அவனே
துயரறுத்தாள் இருடிநகர் ஜோதியன்காண் மனமே. 4

ஓமெழுத்தின் உட்பொருளாய் ஒளிர் இறைவன் அவனே
காமமுதல் அறுபகையும் கடிந்தருள்வோன் அவனே
நாமமநவில் அடியவர்க்கு நலம் அருள்வோன் அவனே
சேமம் நிறை இருடிநகர்த் தேசிகன்காண் மனமே. 5

பொருளருளிப் போகமெலாம் புணர்த்திடுவோன் அவனே
மருளகற்றி மாசில்மனம் வழங்கிடுவோன் அவனே
தெருளருளித் தெவிட்டாப்பே ரின்பருள்வோன் அவனே
அருள்நெறிநல் இருடிநகர் ஆரியன்காண் மனமே. 6

போதனைகள் புகன்றுநமைப் போற்றிடுவோன் அவனே
வேதனைகள் தவிர்த்தருளை விளக்கிடுவோன் அவனே
சாதனைகள் அனைத்தினுக்கும் தனிப்பயனும் அவனே
சூதனைத்தும் தவிர்இருடி நகர்த்துணைவன் மனமே. 7

கண்ணொளியுள் விண்ணொளியாய்க் கலந்தவனும் அவனே
பண்ணொலியாய்ப் பாட்டொலியாய்ப் படர்பவனும் அவனே
புண்ணியருள் நண்ணொளியாய்ப் பொலிபவனும் அவனே
விண்ணவரேத் திருடிநகர் வித்தகன்காண் மனமே. 8

சூரியனைச் சந்திரனைத் துலங்கிடுவோன் அவனே
காரியங்கள் காரணங்கள் கடந்தவனும் அவனே
சீரியநல் லருள்நெறியைச் செப்பிடுவோன் அவனே
ஆரியனாய் இருடிநகர் அவதரித்தான் மனமே. 9

உள்ளமெனும் கமலமிசை ஒளிர்கதிரோன் அவனே
வள்ளலென வான்நிலவை வழங்கிடுவோன் அவனே
தெள்ளுதமிழ்ப் பாடல்பல செப்புகுரு அவனே
கள்ளமில்சீர் இருடிநகர்க் காதலன்காண் மனமே. 10

அறுபகைகள் கடிந்தருளால் ஆண்டருள்வோன் அவனே
உறவனைத்து மாய்அடியா ருள்ளொளிர்வோன் அவனே
பிறவியெனும் கடல்கடத்திப் பேணுபவன் அவனே
அறவொளியாய் இருடிநகர் அமர்குருகாண் மனமே. 11

செல்வமுமாய்ச் சீர்த்தியுமாய்த் திகழ்குரவோன் அவனே
கல்வியுமாய்க் கைத்தொழிலாய்க் கனிவருள்வோன் அவனே
வல்வினைகள் தவிர்த்தருளார் வாழ்வருள்வோன் அவனே
நல்வரங்கள் நல்கிருடி நகர்ப்பதிகாண் மனமே. 12

## 2. குரு அருட் பதிகம்

எண்ணங்கள் யாவும் நீ பேசும்மொழி யாவும் நீ
எவ்வுயிர்க ளின்செயலும் நீ
எண்ணில்பற் பலகோடி உயிர்வகைகள் தொறுமிருந்
தினிதுவெளி வருமொலியும் நீ
எண்ணம் நீ பலவகை எழுத்தும் நீ இயலிசை
இலக்கண இலக்கியமும் நீ
நண்ணுபல உலகினிலும் உறையுயி ரெலாம் புரியும்
நாடகமும் நீ என் இறையே. 1

கண்ணும் நீ மணியும் நீ யுள்ளொளியும் நீ எண்ணில்
காட்சி நீ காண்பவனும் நீ
பண்ணும் நீ பாட்டும் நீ பாடுபவன் நீ இனிது
பாடிடக் கேட்பவனும் நீ
மண்ணும் நீ விண்ணும் நீ அனல்வாயு புனலும் நீ
மதியிரவி உயிர்வகைகள் நீ
புண்ணுறுமென் மனதைத் திருத்தியரு ளரசுபுரி
இருடிநகர் போதன் நீயே. 2

உண்ணுகிற உணவு நீ பருகிடுநன் னீரும் நீ
உயிர்க்கின்ற நல்வாயு நீ
நண்ணுயி ருடம்பு நீ கரணம் நீ புவனம் நீ
நவிலரிய பலபோகம் நீ
பெண்ணும் நீ ஆணும் நீ பேதமொ டபேதம் நீ
பெரியை நீ அணுவுளணு நீ
உண்ணெகி ழுருக்கம் நீ உயர்பத்தி ஞானம் நீ
ஒப்புயர்வில் குருதேவனே 3

செப்பரிய பற்பல வகைச்செல்வம் நீ எண்ணில்
தேவர்புகழும் தெய்வம் நீ
முப்பொழுதும் நின் திரு வருள்மேனி தீண்டியுயர்
முனிவர்கள் வழுத்துமிறை நீ
மைப்படி முகில்கள் நீ மழையும் நீ வளமும் நீ
வாழ்வித்துன் வாழ்பதியும் நீ
எப்பொழுதும் எப்பக்கமும் சூழ்ந் தெனைக்காவல்
புரிஇருடி நகர்இறைவனே 4

---

அம்மை நீ அப்பன் நீ ஆசானும் நீ இணையில்
ஆரியனும் நீ தெய்வம் நீ
செம்மையெல் லாம் நல்கு செல்வம் நீ கல்வி நீ
தேசு நீ புகழ்பொறுமை நீ
இம்மைநலம் மறுமைநலம் எல்லாமும் இனிதுதவி
என்னுளத் தமையும் ஒளி நீ
மும்மைமலம் நீக்கி உயர் முத்தியருள் இருடிநகர்
முனிவன் நீ குருமூர்த்தியே. 5

மனிதவடிவி னில் வந்த கடவுள் நீ மாசற்ற
மாணிக்கம் நீ சட்டமாம்
கனிதந் துயிர்த்தொகை யுடம்பினுள் மனத்துட்
கலந்தொரணு வணுவாகநற்
புனிதம் பெறும்படி யுணர்த்திநன் றாக்கிமெய்ப்
போகமொடு போத முதவி
இனிதுகாத் தருள்முத்தி யீந்தருளும் இறைவன் நீ
இருடிநகர் குருமூர்த்தி யே. 6

விடியுமு னெழுப்பியும் தண்ணீரி லாட்டியும்
விருப்பமொடு கோயில் சுற்றி
மடியுமிடி யும்திர நற்பத்தி செய்வித்தும்
மாண்நிட்டை யினிலாழ்த் தியும்
படியிலுயர் திருநீறு தீர்த்தத்தின் மகிமையைப்
பலவகையி னிற்காட் டியும்
நெடியபிணி நீக்கியும் நலங்கள்பல கூட்டியும்
நிறைகருணை புரிகுரவ னே. 7

தூயபல உபவாச வகைகளைக் காட்டியும்
சொல்லற்ற மவுன மீந்தும்
நேயமிகு நிட்டையினில் மிக நன் றுயர்த்தியும் நீ
ருவிகற்ப நிலைநல் கியும்
காயமனம் வாக்கெலாம் தூய்மைசெய் வித்தும்உட்
கனியும்அன லாய்இருந் தும்
ஏயபல் அருட்பாடல் பாடுவித் தும்பேணும்
இருடிநகர் குருமூர்த்தி யே. 8

இவ்வுலகில் இதுவரை யிலும்வந்த பெரியோர்
இயம்பியுள உயர்பொரு ளெலாம்
செவ்வையுற ஒருசட்ட மென்னத் திரட்டிச்
செகத்திற் களித்த குரு நீ
எவ்வுயிர்க ளுக்கும் எப் போதும் மெய்த் துணையாய்
இருந்துளம் உடம்பி லெல்லாம்
எவ்வகையி னிலும் நீக்க மின்றிக் கலந்து காத்
தருள் தலைவன் நீ என் இறையே. 9

ஈடிணை யிலாத்திரு வருட்பெருஞ் ஜோதியினை
எவ்வுயிர்க ளுங்கா ணவும்
ஈடிணை யிலாத்திரு வருட்கருணை யாம்அமுதை
எவ்வுயிரும் இனிதுண் ணவும்
ஈடிணை யிலாத்திரு வருட்பெருஞ் செல்வத்தை
எவ்வுயிரும் எளிதெய் தவும்
ஈடிணை யிலாத்திரு வருட்சுகம் எவ் வுயிர்களும்
துய்த்திடவும் ஈந்த குருவே. 10

குருநினை நினைந்தெழுந் தேவடிய லிற்றணி
ராடிடிற் குறைகள் நீங்கும்
குருநினை நினைந்துநி னருட்பாடல் நாள்தொறும்
பாடிடிற் கூடும் இன்பம்
குருநினை நினைந்துநி னடிப்பூசை நாள்தொறும்
செய்திடிற் கூடும் செல்வம்
குருநினை நினைந்துநிட் டையில்மூழ்கில் வினைதீர்ந்து
குலவும் ஆனந்த நிறைவே. 11

நின்னடிய ரைப்போற்றி அமுதூட்டின் என்குறைகள்
எல்லாமும் நீங்கி ஏகும்
நின்னடிய ரின்பதத் தொண்டுசெயின் என்வினைகள்
எல்லாமும் நீங்கி யோடும்
நின்னடிய ரின்பாதம் என்சிரத் தேயணியின்
நீங்குமே மூன்று மலமும்
நின்னடிய ரின்பதத் துகளாடின் முத்தியுறும்
நிறைஞான மோன குருவே. 12

## 3. அருள் மணி மாலை

எத்தகைய நோய்களேயும் எத்தகைய பேய்களேயும்
எத்துகொடுந்துய ரையும்
இத்தகைய வகையினி லிருந்ததென வும்பிறர்
எஞ்ஞதவகை யினில் அகற்றும்
சித்தர்கள் சிகாமணி மெய்ஞ் ஞானியர் சிரோமணி
சிறந்தஇரு டிப்பதி மணி
முத்தர்புகழ் தூமணி முழுக்கருணை ரூபமணி
மோனியர்கள் வாழ்த்து மணியே. 1

செல்வமெல் லாம்நல்கு தெய்வமணி அன்பர்குழு
தேடுதிர வியமாம் மணி
கல்வியின் பயன்நல்கு கடவுள்மணி கரவுடையர்
காணரிய தேஜோ மணி
வல்வினைப் பயனெலாம் ஒருநொடியி னில்மாய்க்க
வல்லமணி நல்லருள் மணி
நல்லர மெலாம்நல்கி நன்ருளு மணிஇருடி
நகர்மேவு ஞான மணியே. 2

மனிதஉரு விற்போந்த மாணிக்க மணிதூய
மாண்புமிகு மரகத மணி
புனிதமது ராபுரியில் வைகைதென் கரையினிற்
பூரணனை நன்றணை மணி
முனிவர்புகழ் பொதிகையில் முழுத்தவம் பேணுமணி
முத்துமணி மோகன மணி
இனிதுமணி மணியாக அடியவர்களைத்திரட்
டிருடிநகர் ஏக மணியே. 3

உருவமணி அருவமணி உல்லாச மணியோக
சல்லாப மணி ஒப்பில் நற்
பருவபக் குவம்அடியர் எய்திடச் செய்யுமணி
பரமபதம் இனிதருள் மணி
புருவநடு வினில்நன்று பொலியும்ஒளி மணிஅன்பர்
போற்றிடு புராதன மணி
குருவுருவில் வருமணிஎன் குற்றம் பொறுக்குமணி
இருடிநகர் குலவு மணியே. 4

அன்புமணி அழகுமணி ஆனந்த மணிஅமு
தருத்தியருள் அற்புத மணி
பொன்பொறுமை புகழ்புனிதம் நல்குமணி பொருவில்சிவ
போகமணி யோகமணி மெய்
யின்பமணி இதயதா மரைமலரில் இலகுமணி
எழில்மிக்க சிந்தா மணி
மன்பதைக ளுக்கெலாம் அருளும்உப காரமணி
இருடிநகர் மன்னு மணியே. 5

ஆதார மணிஇருமு வாதார மேவுமணி
அட்சர மெனத்திகழ் மணி
காதார ஓமெனக் கழறுமணி பலகோடி
கற்பகா லமும்ஒளிர் மணி
பாதார விந்தமலர் பத்தர்சிர மீதிற்
பதித்தருளு மணி பரிவுசால்
மாதா பிதாகுரு அருட்டெய்வ மெனஇருடி
மாநகரில் மருவு மணியே. 6

ஆதி நடு அந்தம்எவ ரும்காண வொண்ணு
அருட்ஜோதி மணி ஒப்பிலா
நீதியை வழங்குகண் டாமணி நி ருவிகற்ப
நிலையை அடி யர்க்கருள் மணி
ஓதியெவ ராலும்உண ரற்கரிய பொருளெலாம்
உள்ளத் துணர்த்திடு மணி
ஜாதிசம யங்கடந் திலகருட் சட்டநெறி
தந்தருள வந்த மணியே. 7

எத்திசையும் மெய்யன்பர் ஏத்திட விளங்குமணி
ஏகாந்த நிலையருள் மணி
புத்தியுள் அமைந்துநற் புனிதநெறி யினிலுந்து
புண்யமணி விண்ணொளிர் மணி
சத்தியெல் லாம்நல்க வல்லமணி அருளாய்த்
தழைந்தெனுள் இழைந்தருள் மணி
பத்திமணி சித்திமணி சத்திமணி முத்திமணி
பரலோக நாத மணியே. 8

நவலோக மீதுய்ய நல்வருட் சட்டநெறி
நல்கியருள் ரக்ஷண மணி
தவலோக மொன்றுண் டெனக்கூறி அடியார்கள்
சாரச்செய் சற்குரு மணி
புவலோக முதலான பலலோக முங்காட்டு
போதமணி பூரண மணி
சிவலோக நாதமணி சிற்பர சொருபமணி
இருடிநகர் திகழு மணியே. 9

இத்தரையில் இதுவரையில் எவருமெளி துரையாத
இனியநெறி தந்தருள் மணி
பத்யமிக வும்காட்டி பக்தரை யதிற்கூட்டி
பக்குவம் செய்தருள் மணி
உத்தமர்க ளாகயா வருமொளிரல் வேண்டுமென
உன்னியினி துாக்கிடு மணி
சத்யமணி நித்யமணி சத்வமணி ரத்னமணி
இருடிநகர் சாந்த மணியே. 10

சற்குண மிகுந்தமணி ஷட்குண சம்பன்னமணி
சகுணமணி நிர்க்குண மணி
கற்கஎளி தாகநல் அருட்கல்வி யினை இனிது
கற்பிக்கும் நற்குரு மணி
நிற்கஇந் நெறியிலென நேமியில் அருட்சட்ட
நெறிநல்கு நின்மல மணி
சொர்க்கசுக மதையுலகில் எவருமெளி தெய்தஅருள்
இருடிநகர் ஜோதிமணியே. 11

ஜீவமணி தேவமணி காவலென மேவுமணி
சேவைதரு சீரிய மணி
யாவருமிந் நெறிபற்றி இன்புறுக என்றோர்நெறி
ஈந்தருளும் நற்பெரு மணி
பாவஇருள் படாது பக்தர்கள் குழாத்தினைப்
பாலிக்கும் லக்ஷிய மணி
பாவலர்கள் நாவலர்கள் பாவும்இரு டிப்பதி
படர்ந்தபர மாத்ம மணியே. 12

வேதாந்த மணிஒப்பில் சித்தாந்த மணிஞான
வித்தகருள் மேவருள் மணி
போதாந்த மணிதூய அருளரசு புரிமணி
புலன்களால் அறிவரு மணி
நாதாந்த மணிநவில் கலாந்தமணி நல்யோக
சோடசாந் தத்தொளிர் மணி
மூதாண்ட கோடிகள் முளைத்துவாழ்ந் திடஅருள்
முழுச்சோதி ரூப மணியே. 13

காணரிய பலகாட்சி காட்டுசின் மணிபொன்மணி
கவின்மிகுவை டூரிய மணி
பேணரிய வைரமணி ஜெயமணி விலாசமணி
பெரியகோ மேதக மணி
பூணரிய தவமணி மகாமணி விநோதமணி
புவியைப் புரந்தருள் மணி
மாணருள் விவேகமணி மாநடன மணிலவித
மணித்யாக ராஜ மணியே. 14

ஆரிய னெனப்பாரி னிற்போந்த அருள்மணி
அருட்செயல்கள் பலபுரி மணி
காரியம் அனைத்தையும் நடத்துகாரண மணி
கதிர்க்கொளி வழங்கிடு மணி
சீரியருள் மேவுமணி திருமணி தெருள்மணி
சிறந்திலகு லக்ஷண மணி
சூரியஅருட்கதிர் விளக்கமணி குணமணி
குலாவுபவம் நீக்கு மணியே. 15

வேதமணி வேதத்தை நன்றே விளக்குமணி
விழுமியர்கள் விழைஜெப மணி
பூதமைந் தானமணி புனிதமணி இனியமணி
பொற்பெலாம் நல்கிடு மணி
நாதமணி நீதமணி நவரச சொரூபமணி
நாமரூ பங்கொளு மணி
போதமணி பொருளைப் புகட்டுமணி யென்னுட்
பொருந்துகுரு நாத மணியே. 16

புட்பமென நன்மனதை யேற்குமணி அடியவர்
புலன்வெலச் செயுமொலி மணி
நட்புகொடு நாடுநருள் அற்புதம் மிகப்புரிய
நண்ணுமணி நாயக மணி
நுட்பமணி நூல்களின் சாரமொரு சட்டமென
நுவலுமணி நூதன மணி
பெட்புமிக உதவும்இரு டிப்பதி பிறங்குமணி
பேதமில் அபேத மணியே. 17

தூலமொடு ஆக்கும மெலாம்கடந் திலகுமணி
தூயசுஷுப்தம் ஊயில்ஒளிர் மணி
காலமொடு கற்பனை யனைத்தும் கடந்தமணி
ககனமணி கனிவருள் மணி
ஞாலமிசை நரர்விலங் குகள்பறவை பயிர்யாவும்
நனி வாழ வைத்திடு மணி
சீலமிக நல்கும்உயர் இருடிநகர் திகழுமணி
சிவஞான போத மணியே. 18

கற்புடையர் சிந்தையிற் கருணையொளி கூட்டுமணி
காமதக னம்செயு மணி
பொற்புடைய நற்புருட ராகமணி அடியருட்
புரமூன் றெரித்தருள் மணி
சிற்பர வியோமமாம் தில்லைவெளி யினில்ஆயி
ரம்கால்கள் திகழ்சபை யினில்
அற்புத நடம்செய்மணி அமரர்துதி மணிசச்சி
தானந்த மான மணியே. 19

புகலருளி அடியரைப் போற்றுமணி போகமொடு
போதம் புகட்டிடு மணி
சகலர்விஞ் ஞானகலர் பிரளயா கலர்இதய
சாட்சியாய் இலகொளி மணி
பகலிரவு போக்குவா வுள்வெளி நினைப்பொடு
மறப்பிலாப் பரவுல கினில்
இகலற விளங்குமணி இருடிநகர் மேவுமணி
என்னுளம் கவரும் மணியே. 20

ஆலம் அமு தாககொள்மணி அளவில்பல உலகினிலும்
அருள்நாட கம்புரி மணி
காலனையும வெல்லும்நெறி கழறுமணி அடியரைக்
காவல்புரி சேவக மணி
மூலமந் திரவொலி முழக்குமணி அடியர்க்கு
மோனநிலை நல்கிடும் மணி
சால அருள் வளம்நல்கும் இருடிநகர் தங்குமணி
சற்குரு சொரூப மணியே. 21

கங்கையினை விடயலிற் காட்டுமணி அன்பரைக்
கருணையொ டெழுப்பிடு மணி
துங்கமிகு தண்ணீரில் ஆடடுமணி துதிசெயத்
தூண்டுமணி ஆண்டருள் மணி
சங்கநிதி பதுமநிதி நல்குமணி கற்பகத்
தருவாகி உள்ளொளிர் மணி
எங்கும் என் றும்பொலியும் இன்பமணி இருடிநக
ரினில்மேவும் ஏக மணியே 22

தாரதல முதற்பல தலங்களிலும் அருளொளி
தழைந்திட விழைந்திடு மணி
நிராகுல நிராமய நிருமமணி நிட்டையொடு
நியமங்கள் பலஅருள் மணி
குராவலர் கொளும்சுப்ர மண்யமணி கண்யமணி
குறைநீக்கி நிறையருள் மணி
பராபர அநாமய மனோலய விகாசமணி
பாவியெனுள் நிறையு மணியே 23

பந்தபா சங்களெல் லாம்சுட் டெரிக்குணி
பரலோக நினைவருள் மணி
சந்தமிகு கவிமாலை சுந்தரதன் மணமாலை
சாத்திடெனை வாழ்த்திடு மணி
எந்தவோர் இமைப்பொழுதும என்னுளம் பிரியா
திலங்குமணி என்னுயிர் மணி
மந்தகா சம்குலவு மணிஎனறன் மணவாள
னாகிமகிழ் வருளும் மணியே. 24

பவளமணி படிகமணி நீலமணி நேயமணி
பலஉலக மும்துதி மணி
கவலைகள் அனைத்தும் தவிர்க்குமணி கருணைமணி
கண்டெனை இனித்திடும் மணி
அவலநெறி களினின்று மீட்டுயிர்க ளைப்பேணி
அருள்நெறி அளித்தாள் மணி
குவலய மிதிற்பரம சுகமுதவி இருடிநகர்
குலவுமண வாள மணியே. 25

## 4. 'சட்டம்' எனும் செல்வம்

கோடி கோடி மெய்யடியார்
தேடிக் கண்ட செல்வம்
குவலயம் தோன் றியநாளாய்த்
தூயர்கண்ட செல்வம்
பாடிப்பாடி வேதமெலாம்
போற்றும்உயர் செல்வம்
பாடுபட்டு யோகசீலர்
பங்குபெற்ற செல்வம்
நாடி நாடிப் பத்தரெலாம்
நாளும்விழை செல்வம்
ஞாலமிசை ஞானசித்தர்
யாரும்கண்ட செல்வம்
ஈடிணையில் இருடிநகர்
எந்தையருள் செல்வம்
எவ்வுயிர்க்கும் நலம்புரியும்
'சட்டம்' எனும் செல்வம், 1

அன்புடையர் அருளுடையர்
அகமுறையும் செல்வம்
அன்னைதந்தை ஆசிரியன்
தெய்வமுமாம் செல்வம்
பொன்புகழ்நற் பொறைபொலிவு
புனிதம் அருள் செல்வம்
போகம் அருள் செல்வம் உயர்
போதம் அருள் செல்வம்
என்புருக உருகடியார்க்
கிகபரமாம் செல்வம்
ஏகாந்த நிட்டையிலீர்த்
தின்பம்அருள் செல்வம்
தன்புடையுற் றவரைத்தக்கார்
ஆக்கவல்ல செல்வம்
சற்குருஇத் தரணிக்கருள்
சட்டமெனும் செல்வம், 2

வேதாந்தம் கண்டசெல்வம்
சித்தாந்தச் செல்வம்
வித்தகர்கள் சித்தமிசை
வைத்தபெருஞ் செல்வம்
போதாந்தம் கண்டசெல்வம்
புண்ணியர்தம் செல்வம்
புத்தியினை நன்றியக்கிப்
புனிதம்அருள் செல்வம்
நாதாந்தம் கண்டசெல்வம்
யோகாந்தச் செல்வம்
நாயெனையும் ஈர்த்தருள்
கலாந்தமெனும் செல்வம்
மூதாண்ட கோடிகளுண்
டாக்கியருள் செல்வம்
முத்தர் சித்தர் பத்தர் புகழ்
சட்டமெனும் செல்வம். 3

கண்ணொளிக்குள் விண்ணொளியைக்
காட்டுபெருஞ் செல்வம்
ககனசித்தர் புவனபத்தர்
களிப்புறச்செய் செல்வம்
பண்ணொலிக்குள் பாடலுக்குள்
பொருள் நிறைக்கும் செல்வம்
பத்தியம்தந் தடியவரைப்
பக்குவம் செய் செல்வம்
மண்ணவர்க்கும் விண்ணவர்க்கும்
வாழ்வருளும் செல்வம்
மாண்புமிக்க நிட்டைதந்துள்
மணம் நடத்தும் செல்வம்
எண்ண இயம் பிடஅரிதாம்
இன்பம் அருள் செல்வம்
என்றும்எங்கும் யாரும்புகழ்
சட்டமெனும் செல்வம். 4

அகமுருகித் தொழும்அடியார்க்
கமுதனைய செல்வம்
ஆணவமா யாகரும
மலம்அழிக்கும் செல்வம்
பகலிரவில் லாஇடத்திற்
படர்ந்தொளிர்நற் செல்வம்
பாசமற்றார் நேசமுற்றுப்
போற்றும்உயர் செல்வம்
இகல்தவிர்த்தின் பூட்டியருள்
ஈடிணையில் செல்வம்
எம்மைக்கும் நல்லசெல்வம்
செம்மைதரும் செல்வம்
சுகலளிதச் செல்வம் எந்தத்
தோஷமுமில் செல்வம்
தூயர் குழாம் நாளும்விழை
சட்டமெனும் செல்வம். 5

தங்கத்தின்மே லானசெல்வம்
சாந்தியருள் செல்வம்
தகவுடையார் மிகமகிழ்ந்து
பேணுபெருஞ் செல்வம்
கங்கையினை விடியலிலே
காட்டியருள் செல்வம்
கருணையெனும் திருவமுதை
இனிதருத்தும் செல்வம்
சங்கையெலாம் தீர்த்துச்சம
ரசம்அருளும் செல்வம்
சத்திதரும் செல்வம்உயர்
சித்திதரும் செல்வம்
எங்கள்குரு இருடிநகர்
ஈசன்அருள் செல்வம்
எனைத்தன்வசம் ஈர்த்தினிதாள்
சட்டமெனும் செல்வம். 6

கள்ளமற்ற உள்ளமுள்ளோர்
கண்டுகொண்ட செல்வம்
காவல்மிக உள்ளசெல்வம்
கரவறியாச் செல்வம்
எள்ளில்எண்ணெய் போலஎன்றும்
எங்கும்நிறை செல்வம்
ஏகசுக போகம்அளித்
தெனைவிழுங்கும் செல்வம்
உள்ளெனவாய் வெளியெனவாய்
ஓங்குபெருஞ் செல்வம்
உள்ளுமின்றி வெளியுமின்றி
ஒன்றவைக்கும் செல்வம்
புள்ளினமும் விலங்கினமும்
தாவரமும் பிறவும்
போற்றிஉயர் பேறுபெறும்
சட்டமெனும் செல்வம் 7

சாத்திரத்துட் சாரமெலாம்
திரண்டதொரு செல்வம்
தவம் விளக்கி அவம் விலக்கித்
தகவருளும் செல்வம்
கோத்திரத்துச் சண்டையெலாம்
குறைக்கும் உயர் செல்வம்
குலத்துள்உயர் வடியர் குலம்
எனவிளக்கும் செல்வம்
பாத்திரத்தைப் பக்குவமாய்ப்
பாதுகாக்கும் செல்வம்
பயன்நிறைந்த பண்டமென
அருள்நிறைக்கும் செல்வம்
சூத்திரமுட் காணவைத்துத்
துணைபுரியும் செல்வம்
ஜோதியொளி காட்டியதிற்
கூட்டுசட்டச் செல்வம் 8

சந்தமறை யாவும் ஒன்றித்
தேடிக்கண்ட செல்வம்
சாந்திநிறை சீலமெலாம்
நாடிக்கண்ட செல்வம்
அந்தம்நடு ஆதியொன்றும்
அறிவரிதாம் செல்வம்
அன்புடையோர்க் கின்பமெலாம்
என்றும் அருள் செல்வம்
சிந்தைநிறை வுள்ளவரைச்
சிவமாக்கும் செல்வம்
சிதையுமனம் தெளியவைத்துச்
செம்மை செயும் செல்வம்
எந்தவகைப் பேதமும் இல்
லாதிலகும் செல்வம்
இதயமிசை புதையலென
இலகுசட்டச் செல்வம் 9

எட்டுருவாய் இலகுசெல்வம்
எங்கும்நிறை செல்வம்
எப்பொழும் உள்ளசெல்வம்
எமைப்புரக்கும் செல்வம்
சிட்டர்களை ஆண்டருளிச்
சிவமாக்கும் செல்வம்
செய்தவத்தின் திறம் விளக்கி
உய்தி தரும் செல்வம்
துட்டரையும் திருத்தி நன்று
தூய்மை செயும் செல்வம்
துணிவருளிப் பிணிவிலக்கிப்
பணிவருளும் செல்வம்
உட்டெளிவு தந்தருளி
ஊக்குபெருஞ் செல்வம்
உண்மைநெறி யான அருட்
சட்டமெனும் செல்வம் 10

கற்பனைகட் கெட்டரிதாம்
கருணையெனும் செல்வம்
கண்ணிமைபோல் கணமும் எனைக்
காத்தருளும் செல்வம்
சொற்பனம்சாக் கிரம் சுழுத்தி
துரியமுமாம் செல்வம்
துரியாதீ தத்தொளியாய்த்
துலங்குபெருஞ் செல்வம்
விற்பனர்க்கும் உற்பனமாய்
விளங்குபெருஞ் செல்வம்
வேண்டுதல் வேண் டாமையிலா
விறலருளும் செல்வம்
அற்பனெனை யும்தன் வசம்
ஆக்கி நன்ருள் செல்வம்
அருள்வடிவாய் அடியரை யாள்
சட்டமெனும் செல்வம். 11

அண்டம் அனைத் தும்கடந்தே
எங்கும் நிறை செல்வம்
அருளரசாள் செல்வம் எலாப்
பொருளும் அருள் செல்வம்

கண்டதுமே யிர்த்தருளும்
காந்தமெனும் செல்வம்
கண்டறியா ரையும்இழுக்க
வல்லபெருஞ் செல்வம்

கண்டெனஉள் ளினிக்கும் செல்வம்
கனமதாச் செல்வம்
கனிரசமாய்த் தனியமுதாய்க்
கலந்துள் ஒளிர் செல்வம்

தொண்டர்கட் கெல்லாம் வழங்கிச்
சோர்வ கற்றும் செல்வம்
தூய்மையுடன் மேன்மையருள்
சட்டமெனும் செல்வம். 12

## 5. ஆனந்தக் களிப்பு

1. ஓங்கார உருவம்கொள் நாதன்—என்றன்
உளமலர் மீதமர்ந் தொளிர்குரு நாதன்
ஆங்காரம் நீக்கி யருள்வான்—பொல்லா
ஆசைகள் நீக்கிமெய் யன்பை அருள்வான்
(ஓங்கார)

2. இருடிப்பட் டிக்குரு நாதன்—உண்மை
இன்பமெல் லாமெனக் கீந்தருள் நாதன்
பருதியல் கோடிநேர் நாதன்-தொடர்
பவப்பிணி நீக்கியொண் பதமருள் நாதன்
(ஓங்கார)

3. சட்டம் என் றொருநெறி யீவான்-என்றும்
தக்க அடியர் குழுவினுட் சார்வான்
இட்டமெல் லாம்பூர்த்தி செய்வான்-ஒப்பில்
ஏகாந்த நிட்டை வழங்கி யருள்வான்
(ஓங்கார)

4. தீர்த்தம் திருநீறு தருவான்-யார்க்கும்
தீராப்பிணிகள் எல் லாம்தீர்த் தருள்வான்
ஆர்த்தர்கட் காரமு தாவான்-உண்மை
அன்பும் அருளும்பே ரின்பமும் ஆவான்
(ஓங்கார)

5. அடிமையாய்ப் பிள்ளையாய் ஏற்பான்-நண்பன்
ஆகி மணவாள னாகிப் புரப்பான்
கடிமணச் சோலை நடுவில்-என்னைக்
கட்டியணைத்துக் கலந்தின்ப மீவான்
(ஓங்கார)

6. எல்லாம் எனக்கீய வல்லான்-என்னை
எப்போதும் காக்கக் கங்கணம்கட்டிக் கொண்டான்
நல்லார் குழுநடு வைப்பான்-உண்மை
ஞானம் உணர்த்தி நலம்பல செய்வான்
(ஓங்கார)

7. உருவம் எல்லாம் அவன் ஆவான்-ஒவ்வோர்
உருவுள்ளும் அருவாகி உள்ளே யமைவான்
திருவனைத்தும் அவன் ஆவான்-சீர்கொள்
செய்தொழி லாகி வருவாயும் ஆவான்
(ஓங்கார)

8. அழகாய் அறிவொளி யாவான்-ஒப்பில்
அருளறி வாகி அமைதியும் ஆவான்
பழகுபல் சாதனம் ஆவான்-யாரும்
பயிலும்பல் சாதனத் தின்பயன் ஆவான்
(ஓங்கார)

9. அன்னையும் அத்தனும் ஆவான்-அன்பன்
ஆரியனாகி அருட்டெய்வ மாவான்
முன்னை வினைகள் தவிர்ப்பான்-மேலும்
மூளும் வினைகள் மூளாதருள் செய்வான்
(ஓங்கார)

10. மும்மை மலங்கள் முறிப்பான்-தூய
மோனநிலையும் வழங்கிப் புரப்பான்
செம்மை யனைத்தும் தருவான்-அருட்
சேவடி சேர்த்துப்பே ரின்பம் தருவான்
(ஓங்கார)

11. என்பிழை யாவும் பொறுப்பான்-என்றும்
எப்பக்க மும்காவ லாக இருப்பான்
பொன்புகழ் யாவும் தருவான்-என்றன்
பொறிபுல னுக்கும் விருந்தா யமைவான்
(ஓங்கார)

12. யான்அவ னைமறந் தாலும்-அவன்
என்னை மறவா திழுத்தணைத் தாள்வான்
கோன்அவ னுக்கிணை யுண்டோ-எண்ணில்
கோடியண் டங்கட் கவன் மன்னன் அன்றோ
(ஓங்கார)

13. எப்படியோ என்னைத் தொட்டான்-உனக்
கெப்போதும் நான்மண வாளன் என்றிட்டான்
எப்பிறப்பும் விட்டகலா-உற
வென்றுள் ளுணர்த்தி இதயத் திணைந்தான்
(ஓங்கார)

14 உடலாய் உயிராகி யுள்ளான்-என்
உயிர்க்குயி ராகிஉள் ளும்புற மானான்
நடலைதவிர்த்தென்னை யாண்டான்-ஆன்ம
நாயகனாகி நலங்கள் அளித்தான்
(ஓங்கார)

15. ஒவ்வொர் அணுவுள்ளும் மேவி-இன்ப
ஊற்று சுரக்க உயர்அருள் செய்வான்
எவ்வோர் பொருளுள்ளும் மேவி—இருந்
தெங்கெங்கும் பேரின்ப மாக்கி யருள்வான்
(ஓங்கார)

16. எண்ணமெல் லாமாய் அமைவான்-அன்பர்
எண்ணிய எண்ணியாங் கெய்த அருள்வான்
பண்ணமை பாட்டாய் அமைவான்-பாடும்
பக்தர்கட்கின்பப் பரிசு கொடுப்பான்
(ஓங்கார)

17. மொழிபல வாகி யமைவான்—எந்த
மொழியுள்ளும் தானே முதன்மை வகிப்பான்
வழியெல்லாம் காட்டி யருள்வான்-இன்ப
வழியீ தெனக்காட்டி யீர்த்தின்ப மீவான்
(ஓங்கார)

18. செயல்கள் எல்லாமாய் அமைவான்-அன்பர்
செயல்கள் அனைத்தும்தன் செயல்எனக் கொள்வான்
முயல்வார் முயற்சிக் கருள்வான்-சற்றும்
முயலா தமைகென மோனமும் ஈவான்
(ஓங்கார)

19. திருவுள்ளப் படியாவும் செய்வான்-அவன்
திருவடி பற்றினோர்க் கேஇன்பம் செய்வான்
கருவுள் ளுயிரைப் புகுத்தி-உண்மை
காட்டித் திருத்திக் கருணைசெய் தாள்வான்
(ஓங்கார)

20. செப்படி வித்தைகள் செய்வான்-ஒன்றும்
செய்யாதவன் போலச் சும்மா இருப்பான்
எப்படிப் பட்டவ ராலும்-அவன்
இயல்பை எடுத்தோத முடியாது தோழி
(ஓங்கார)

21 எங்கெங்கும் தானாய் இருப்பான்-எங்கும்
இல்லாத வன்போலக் காட்டி மறைவான்
அங்கங்கும் அன்பர்கட் காகத்-தோன்றி
அல்லல் களைந்தரு ளானந்த மீவான்
(ஓங்கார)

22. வேதங்கள் யாவும் மொழிவான்-அந்த
வேதங்கள் யாவுமே நானெனச் சொல்வான்
வேதங்கட் குட்பொரு ளாவான்-அந்த
வேதங்கள் காணு விழுப்பொரு ளாவான்
(ஓங்கார)

23. பூதங்கள் தோறும் பொலிவான்-பஞ்ச
பூதத் தலைவர்க ளாகி யமைவான்
பூதக் கலப்பென ஆவான்-பஞ்ச
பூதமும் காணுப் பொருளுமென் றுவான்
(ஓங்கார)

24. ஆதி நடுஅந்த மாவான்-ஆதி
அந்தம் நடுவில் அருளொளி யாவான்
ஜோதி சொரூபமு மாவான்-சுயஞ்
ஜோதியுட் ஜோதி பரஞ்ஜோதி யாவான்
(ஓங்கார)

25. போக்கு வரவென ஆவான்-எங்கும்
போக்கு வரவில் பொருளென ஆவான்
வாக்கு மனம்காய மாவான்-காயம்
வாக்கு மனத்துக்கெட் டாதவ னுவான்
(ஓங்கார)

26. கண்டவர் விண்டிலர் என்பார்-அவனைக்
கண்டவர் விண்ட நூல் எண்ணில வாகும்
விண்டவர் கண்டிலர் என்பார்-மறை
விண்டவர் யாருமே கண்டவர் கண்டாய்
(ஓங்கார)

27. ஒன்றஃ திரண்டல்ல என்பார்-சிலர்
ஒன்றல்ல அஃதிரண் டாமென்ன மொழிவார்
ஒன்றும் பலவும்அஃ தென்பார்-சிலர்
ஒன்ருய் வேருய்உட னுவதஃ தென்பார்
(ஓங்கார)

28. ஒன்றும் புரியாமல் இங்கே-ஏதோ
உளறுவ தன்றி உண்மை கண்டிலோமால்
நன்றே நமக்கிதைத் தெளிவாய்-இங்கு
நவிலுவோர் யாரெனக் கண்டிலம் தோழி.
(ஓங்கார)

29. சங்கற்பம் இல்லான் என்பாரால்-அவன்
சங்கற்பித் தால்சிருட்டி யாகும் என் பாரால்
இங்கிதன் உண்மைதான் என்னே-எல்லாம்
எங்கோன் உணர்த்திட்டா லன்றி விளங்கா
(ஓங்கார)

30. கன்மத்தால் ஜென்மம்என் பாரால்-எந்தக்
கன்மம் முதற்ஜென்மத் திற்கெனக் கேட்டால்
நன்மக்கள் கூறும் விடைகள்-சற்றும்
நமக்குத் தெளிவாகப் புரியவே இல்லை,
(ஓங்கார)

31. ஜென்மம் வந்ததுபற்றி எண்ணேல்-இந்த
ஜென்மம் தீரவழி காணுதி என்பார்
நன்மக்கள் சொல்வழி நாடச்-சற்றும்
நமக்கு முடிவதே இல்லைகாண் தோழி
(ஓங்கார)

32. ஆண்டவ னேவந்து நம்மைத்-தடுத்
தாண்டருள் செய்துகாப் பாற்றிட்டா லன்றி
மூண்ட பவம் முடி யாதாம் என்று
முடிவாகக் கொள்வோம் குருநெறி நிற்போம்
(ஓங்கார)

உலகில் எந்த உயிரையும் குற்றம் சொல்வதற்கு உனக்கு அருகதை இல்லை.

நீ மாசுமறுவற்றவனுக நடந்து கொண்டாயானுல் உன் உள்ளத்தில் பிரதிபலிக்கும் ஒவ்வோர் அணுவும் மாசு மறுவற்றதாகவே இருக்கும். அம் மனக் கண்ணுடியில் தோன்றும் ஒவ்வொரு பிம்பமும் பலகோடி கதிர்களை வீசி உலகைத் தூய்மையுறச் செய்யும்.

இதை விட்டு, தூய ஆடியில் பற்றெனும் சேற்றைப் பூசி, மற்றையரைத் தூஷிப்பது ஏன்?

உனக்கு இவ்வுலகத்தி லிருந்து தரப்படுகின்ற ஒவ்வொன்றும் உன்னுல் முன்பு செய்யப்பட்டதே என்பதை நன்ருக உணர்ந்துகொள்.

எல்லாத்தவங்களினும் இது மேலான தவம். அனந்தகோடி உயிர்களை ஆட்டுவிக்கின்ற பரப்பிரம்மம் எதுவோ, அது உனக்கு இடும் கட்டளைகளை மறுக்கவோ, வெறுக்கவோ, உனக்கு ஏது அதிகாரம்?

ஆண்டவர் அருள்.

ஓம்:

## மதுரைப் பரிபூர்ண விநாயகர் திருக்கோயில் திருப்பணி

பூவுலகில் வாழும் எல்லா உயிர்களும் இனம், மதம், மொழி, நாடு, பொருள், கல்வி, வயது முதலான எந்தவித பேதமும் இன்றி, எளிதில் கடைப்பிடித்து, உடல் நலம், உள நலம், உயிர் நலம் ஆகிய அனைத்தும் எய்தி, அருள் வாழ் வாற்றிப் பேரின்பம் துய்க்கத்தக்க செந்நெறியைச் **'சட்டம்'** என்ற பெயரால் உலகுக்கு அருளி, உறுதுணையாய் இருந்து, அருளரசாட்சி புரிந்துவரும் ஸ்ரீ இரெட்டியப்பட்டி சுவாமிகட்கு அருட் காட்சியளித்து, தவநிறைவும் அருள்நிலையும் பெறப்புரிந்த ஸ்ரீ பரிபூர்ண விநாயகர் திருக்கோயில் மதுரைமா நகரில், வைகைநதியின் தென் கரையில், ரெயில் பாலத்திற்கு மேற்கில் அமைந்துள்ளது.

அத் திருக்கோயிலின் அருள் திருப்பணிக்குப் பிள்ளையார் குப்பம் உயர்தவத்திரு. அருட்சக்தி அன்னையார் அவர்களுடன் ஆலோசித்து, ஆவனபுரிந்து அருட் பயன் பெற்றுய்ய வேண்டுகின்றோம்.

இங்ஙனம்,

சுவாமிகளின் அடியார்கள்.